# எலியும் பறவை குட்டியும்

மர்ஜோரி நியூமன்

தமிழில் கிருஷ்ணன்





நம்ம குட்டி எலி ஒரு பறவை குட்டியை மரத்தடியில் கண்டுபிடிச்சுச்சாம். அது தன் கூட்டிலிருந்து தவறி விழுந்தது போல் இருந்தது.



நீண்ட நேரம் எலி பறவை குட்டி கூடவே இருந்ததாம். ஆனால் யாரும் பறவையை காப்பாற்ற வரவே இல்லையாம்.



எலி பறவை குட்டியை தன்
வீட்டிற்கு அழைத்து சென்றது.

ஒரு கூடும் கட்டி கொடுத்ததாம்.

“அம்மா இதை பாரு” என்றது எலி





“பறவை குட்டியை பார்த்து கொள்வது
மிகவும் கஷ்டமான வேலை”
என்றது  அம்மா எலி.



“நிறைய குட்டிகள் இறந்து போக
கூடியவை”  என்றார் அப்பா எலி.

“என்னுடைய பறவை குட்டி இறக்காது”
என்றது குட்டி எலி



குட்டி எலியின் நண்பர்கள் பறவைக்கு உணவு தேடி கொடுத்தார்கள்.

அம்மா எலி எப்படி பறவை குட்டிக்கு ஊட்டுவது என்பதை கற்று கொடுத்தது.



பறவை குட்டி எப்போதெல்லாம் தலை காட்டியதோ அப்பதெல்லாம் ஊட்டி விட்டதாம் எலி. பறவை குட்டி சாகவில்லை. அது நன்கு வளர்ந்து வந்தது.

இது என்னுடைய செல்ல பறவை என்றதாம் குட்டி எலி
இது உன்னுடைய செல்ல பறவை அல்ல. இது காட்டு பறவையாகும் என்றது அம்மா எலி. பறவை குட்டி சிறகடித்தது.



“உன் பறவை பறக்க விரும்பிகிறது” என்றது அம்மா எலி
“இல்லை அது பறக்காது” என்றது எலி.





சில கட்டைகளையும், ஆணிகளையும் எடுத்து வந்தது எலி.



அப்பாவுடைய சாமான்களை இரவல் வாங்கி கொண்டது.

“என்ன செய்ய
போகிறாய்” என்றார்
அப்பா.



“ஒரு கூண்டு ஒன்று செய்ய போகிறேன்” என் பறவை குட்டிக்கு என்றது எலி.



“அது செல்ல பிராணி அல்ல கூண்டில் அடைப்பதற்கு அது ஒரு காட்டு பறவையாகும். அது பறக்க விடுவது தான் நல்லது” என்றார் அப்பா.

“முடியவே முடியாது” என்றது எலி.

பறவையை கூண்டில் அடைத்து விட்டது எலி
சோகமாகி விட்டது பறவை குட்டி.



அம்மா எலியும் பறவையை கண்டு சோகமாகி போனது.
ஆனால் எலி பறவையை கூண்டிலேயே வைத்திருந்தது. ஏன்னா தன் செல்ல
பறவையின் மீது அவ்வளவு அன்பு கொண்டிருந்தது.





ஒரு நாள் தாத்தா குட்டி எலியின் வீட்டிற்கு வந்திருந்தார்.
அவர் எலியின் செல்ல பறவையை பார்த்தார்.



“ஒரு நடை போயிட்டு வரலாம் வா” என்றார் குட்டி எலியிடம் தாத்தா.

எலியை மலை உச்சிக்கு
அழைத்து சென்றார் தாத்தா.



மேலிருந்து மலை அடிவாரத்தில் இருந்த மரங்களையெல்லாம் பார்த்தது எலி.



சூறை காற்று தன்னை தூக்கி கொண்டு போவது போல் உணர்ந்தது எலி.



“ஓஹோ ஓஹோ ! நான் பறப்பது போல உணருகிறேன் தாத்தா” என்றது எலி.
“கிட்ட தட்ட” என்றார் தாத்தா.



வீட்டிற்கு வந்த போது கூண்டிலிருக்கும் தன் பறவை குட்டியை பார்த்தது எலி.



ஒரு இருட்டு கூண்டில் எந்த அசைவுமில்லாமல் இருப்பதை பார்த்து வருந்தியது எலி.

“பறவைகள் பறப்பதற்கே” என்றது எலி.



கூண்டை திறந்து விட்டு பறவை குட்டியை பறக்க விட்டது எலி.
இதுவே உண்மையான அன்பாகும் என்று நினைத்து அழுதது.



பின்பு எலி காட்டுக்கு சென்றபோது , தன் செல்ல பறவை உயரத்தில் பறந்து திரிவதை பார்த்து பரவசம் அடைந்தது.